# ஸ்ரீ ராமாநுஜன் 165, 166.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 14 | 1962ஆ செப்டம்பர், அக்டோபர்மீ<br>சுபக்ருத்ஆ புரட்டாசி, ஐப்பசிமீ | ஸஞ்சிகை 9, 10. |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி 54.

குரவை முதலாங்கண்ணன் கோலச் செயல்கள் *
இரவுபக லென்னுமலென்றும் *—பரவுமனம்
பெற்றேனென்றேகளித்துப் பேசும்பராங்குசன்றன் *
சொற்றேனில் நெஞ்சே! துவள்.

| | | | |
|---|---|---|---|
| கண்ணன் குரவை முதல் ஆம் கோலம் செயல்கள் | கண்ணபிரானுடைய ராஸக்ரீடை முதலான அழகிய சேஷ்டிதங்களை | பரவு மனம் பெற்றேன் என்றே களித்து பேசும் | அநுபவிக்கும்படியான நெஞ்சு படைத்தேனென்று களித்தருளிச் செய்த |
| இரவு பகல் என்னுமல் என்றும் | இரவுபகலென்கிற வாசியின்றிக்கே எக்காலத்திலும் | பராங்குசன் தன் சொல் தேனில் | நம்மாழ்வாருடைய ஸ்ரீஸூக்தியாகிற மதுவிலே |
| | | நெஞ்சே | மனமே! |
| | | துவள் | நீ யீடுபட்டிரு. |

கண்ணபிரான் செய்தருளின ராஸக்ரீடை முதலான திவ்யசேஷ்டிதங்களிலே அஹோராத்ர விபாகமின்றிக்கே எப்போதும் ஈடுபட்டு அவற்றையே அநுபவிக்கும்படியான நெஞ்சு பெற்றேனே! என்று மிக்க களிப்புடனே * குரவை யாய்ச்சியர் பதிகம் பேசின ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தி யம்ருதமே நமக்குப் பரமபோக்ய மென்றதாயிற்று.

கீழ் ஐந்தாம் பத்தில் *பிறந்தவாறும் என்கிற திருவாய்மொழியில் எம்பெருமானுடைய சேஷ்டித விசேஷங்களைச் சிந்தித்து உருகி உள்குழைந்து அந்தோ! அநுபவிக்க முடியவில்லையே யென்று தளர்ந்து பேசினார்; அக்குறை தீர்கின்றது இத்திருவாய்மொழியில். எம்பெருமானுடைய பல பல சேஷ்டித விசேஷங்களை வாயாரச் சொல்லி நன்றாக அநுபவித்து அதனால் தமக்குண்டான பூரிப்பைப் பெருமிடறு செய்து வெளியிடுகின்றார் ஆழ்வார் இத்திருவாய் மொழியில் என்க.

இதில் ஒவ்வொரு பாசுரங்களிலும் முன்னடிகள் பகவானுடைய சேஷ்டித விசேஷங்களைப் பேசுவனவாகவும், பின்னடிகள் அந்த சேஷ்டிதாநுபவத்தினால் தமக்குண்டான களிப்பைக் கனக்கக் கூறுவனவாகவும் அமைந்திருக்கின்றன. *நீசனேன் நிறையொன்றுமிலேன்* என்று நைச்சியாநுஸந்தானத்தின் பரம காஷ்டையிலே நிற்கின்ற ஆழ்வார் இங்கு "எனக்கினியார் நிகர் நீணிலத்தே" என்றும், "எனக்கார் பிறர் நாயகரே" என்றும் "மாறுளதோ விம் மண்ணின் மிசையே" என்றும் இங்ஙனே ஆவலிப்புடைமை தோற்றக் கூறுவது பரம

ஸாத்விகத்வத்திற்குக் குறையன்றோ! என்று சங்கிக்க வேண்டா; குணாநுபவத்தாலுண்டான ஆனந்தம் தலைமண்டை கொண்டு அதன் பரீவாஹரூபமாக இங்ஙனே பேசுவது ஸ்வப்ரயத்ந பூர்வகமன்று; குணாநுபவம் பரவசமாக்கிப் பேசுவிக்கிறபடி. "நாவலிட்டுழிதருகின்றோம் நமன் தமர் தலைகள்மீதே, மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வ! நின்னாமங் கற்ற, ஆவலிப்புடைமை கண்டாய் அரங்கமா நகருளானே" என்பனபோன்ற பாசுரங்கள் ஸாத்விகாஹங்கார ரீதியிலே அவதரித்தனவென்று கொள்க. உலகில் மதுபானம் பண்ணினார் தம்மை யறியாமல் சொல்லுகிறபடியும் செய்கிறபடியும் காணாநின்றோம்; *எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே* என்ற பரம விலக்ஷண மதுவைப் பானம் பண்ணினார்க்குச் சொல்லவேணுமோ?

இத்திருவாய்மொழியில் ஆழ்வார் கிருஷ்ணாவதாரமல்லது மற்றொன்று அறியாதபடி ததேகப்ரவணரானார். * அகல்கொள் வையமளந்த மாயன்* என்றும் *மாணியாய் நிலங்கொண்ட மாயன்* என்றும் த்ரிவிக்ரமாவதார ப்ரஸ்தாவமும் இதில் இல்லையோ என்னில்; உண்டு; அந்த அவதார சேஷ்டிதமும் க்ருஷ்ணாவதார சேஷ்டிதங்களிலே ஐக்கியப்பட்டதென்றே அநுபவ ரஸிகர்களின் குறிக்கோள். ஆனதுபற்றியே யசோதைப் பிராட்டியும் "சிறியனென்று என்னிளஞ் சிங்கத்தை இகழேல் கண்டாய், சிறுமையின் வார்த்தையை மாவலியிடைச் சென்று கேள்" என்றதும், "வருக வருக வருகவிங்கே வாமனநம்பீ! வருக விங்கே" என்றதும்.

இப்பதிகத்தினவதாரிகையில் ஈட்டு ஸ்ரீஸூக்தி:—"இத் திருவாய்மொழியில் ஆழ்வார் ஸ்ரீ வால்மீகி பகவானோடொப்பர்; அவனும் ராமாவதாரமல்லதுபோக்கியறியான், அவனுடைய ப்ரபந்தமும் அப்படியே. இவரும் க்ருஷ்ணாவதாரமல்லது அறியார்; இத்திருவாய்மொழி க்ருஷ்ண வ்ருத்தாந்த மொழிய வேறொன்றைச் சொல்லாது. *ஹாவோ நாந்யத்ர ஹச்சதி* என்றுகொண்டு பரஉசையுங்கூட வேண்டேனென்ற திருவடியைப்போலே யாயிற்று இவரும் க்ருஷ்ணாவதார மொழிய வேறொன்று அறியாதபடி"..."*பிறந்தவாற்றில் இவர்க்குண்டான இழவெல்லாம் தீரும்படி ஸ்ரீ ப்ருந்தாவன வ்ருத்தாந்தத்தைக் காட்டிக் கொடுக்கக் கண்டு அது பூதகாலமாய்த் தோற்றுகையன்றிக்கே ஸமகாலம்போலே கிட்டிநின்று அநுபவிக்கிறார்" இத்யாதிகள் காண்மின்.

... (*)

## திருவாய்மொழி நூற்றந்தாதி 55.

துவளறுசீர் மால்திறத்துத் தொன்னலத்தால் * நாளும்
துவளறுதன் சீலமெல்லாஞ் சொன்னான் *—துவளறவே
முன்ன மனுபவத்தில் மூழ்கிநின்ற மாறன் * அதில்
மன்னுமுவப் பால்வந்த மால்.

| | |
|---|---|
| முன்னம் அநுபவத்தில் | கீழ்ப்பதிகத்தில் எம்பெருமானை அநுபவிக்குந் திறத்தில் |
| துவள் அற மூழ்கி நின்ற மாறன் | ஒரு குறையுமின்றிக்கே பரிபூர்ணமாக அவகாஹிக்கப் பெற்றிருந்த ஆழ்வார் |
| அதில் மன்னும் உவப்பால் வந்த மால் | அவ்வநுபவத்தில் பொருந்தி நிற்கப் பெற்ற ஆனந்தத்தாலுண்டான வியாமோஹத்தினால் |
| துவள் அறு சீர் மால் திறத்து | குற்றமற்ற கலியாணகுணங்களை யுடைய எம்பெருமான் விஷயத்தில் |
| தொல் நலத்தால் | இயற்கையான பக்தியால் |
| நாளும் துவள் அறு | நித்ய நிர்துஷ்டமாயிருக்கின்ற |
| தன் சீலம் எல்லாம் | தம் படிகளையெல்லாம் |
| சொன்னான் | அருளிச்செய்தார். |

* * * துவளில் மாமணிமாடத் திருவாய்மொழியானது ஆழ்வார் தம்முடைய படிகளைத் தாமே தெரிவிப்பது என்று ஈட்டி லருளிச் செய்தபடியே இங்கு மருளிச் செய்கிருர். "மாறன் தன் சீலமெல்லாம் சொன்னன்" என்கிருர். ஹேயகுணம் சிறிதுமின்றிக்கே ஸமஸ்த கல்யாண குணத்மகனை எம்பெருமான் விஷயத்தில் பக்தியடியாகத் தமக்குண்டான படிகளை யெல்லாம் *துவளில் மாமணிமாடப் பதிகத்தில் ஆழ்வார் அருளிச்செய்தார்; அதற்குக் காரணம்-கீழ்ப் பதிகத்தில் விளைந்த அனுபவமே என்றதாயிற்று.

ஆழ்வார்க்கு எம்பெருமானுடைய தன்மைகளை வருணிப்பதில் எவ்வளவு குதூஹலமோ அவ்வளவு குதூஹலம் தம்முடைய தன்மைகளை வருணிப்பதிலுமுண்டு. எம்பெருமானுக்கே மங்களாசாஸநம் பண்ணப் புகுந்த பெரியாழ்வார் * அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு* என்று தமக்கும் தாமே மங்களாசாஸநம் செய்துகொண்டார்; எம்பெருமானுடைய பெருமையைப் பாங்காக அநுபவிக்கவல்ல அடியார்கள் இல்லையாயின் எம்பெருமானிருந்து யாது பயன்? நிலா தென்றல் முதலானவை பரம போக்யமேயானாலும் அவை அநுபோக்தாக்களுக்கு உபயோகப்படாதவளவில் 'காட்டி லெறித்த நிலாப் போலே' என்னும்படி. அவத்யம் பெறுகின்றனவன்றே. அப்படியே, எம்பெருமானுடைய பெருமையும் அவனை நன்ருக அநுபவிக்கவல்லவர்களுடைய பெருமையிலே சொருகி நிற்கும். பாகவதர்களின் பெருமையைப் பேசுவதும் பகவானுடைய பெருமையைப் பேசுவதேயாகும். ஆனதுபற்றியே *திருமாலவன் கவி* என்று பகவத்கீர்த்தனமாகக் கொண்ட திவ்யப்ரபந்தத்திலே *பயிலுஞ் சுடரொளி* *நெடுமாற்கடிமை* முதலான பதிகங்கள் பாகவத ப்ரபாவ கீர்த்தந பரங்களாகவும் அமைந்தன.

பாகவதர்களுள் ஆழ்வார் சிறந்தவரன்றே. ஆத்ம ப்ரசம்ஸை [அதாவது தற்புகழ்ச்சி] அவத்யமானாலும் பகவத் விஷயத்திலுண்டான தமது ஈடுபாட்டைத் தாமே பேசிக்கொள்வது தகுதியேயாகும். இது அவத்யமன்று. ஆனல், 'எம்பெருமான் விஷயத்தில் நான் இப்படியிப்படி யீடுபட்டிருக்கிறேன்' என்று வ்யக்தமாகச் சொல்லிக் கொள்வதில் ஆழ்வார்க்குச் சிறிது ஸங்கோசமுண்டாயிற்றுப் போலும். எம்பெருமானும் தன்னுடைய பெருமையைத் தானே ஒரு பெரிய பிரபந்தமாக வெளியிட்டுக்கொள்ள வேணுமென்று ஆசைப்பட்டு, அப்படி நாமே நம் பெருமையைப் பேசிக்கொண்டால் அது சுவைமிக்கதாகாது என்று பார்த்து நம்மாழ்வார்மீது ஆவேசித்து அவர் வாக்காலே தானே தன் பெருமைகளைப் பேசிவிட்டுக் "குருகூர்ச் சடகோபன் சொன்ன" என்று ஆழ்வார்மேலே ஆரோபணம் செய்தான் என்று சொல்லுவதொன்றுண்டு; இவ்விஷயத்தை ஆழ்வார் தாமே மேலே ஏழாம் பத்தில் *என்றைக்கு மென்னை* என்கிற திருவாய்மொழியிலே நன்கு வெளியிடக் காண்கிருேம். அதுவேபோல இப்போது ஆழ்வார் தாமும் தம் பெருமையைத் தாமே வெளியிட்டுக்கொள்ள வேணுமென்று ஆசைப்பட்டு அது சுவையுடைத்தாவதற்காக அதை வேருெருவர் தலையில் ஏற்றப் பார்த்துத் தோழிமார் பாசுரமாக வைத்து இத் திருவாய்மொழியை அமைத்தருளினாராயிற்று; ஆழ்வார் பகவத் விஷயத்தி லீடுபட்டிருக்கும் பெருமையை வேறு சில பாகவதர்கள் எடுத்துக் கூறுவதாக உள்ளுறை பொருள் காண்க.

திருநகரியைச் சேர்ந்த நவ திருப்பதிகளுள் தலைவில்லிமங்கலம் என்பது ஒரு ஆச்சரியமான திவ்யதேசம். இரட்டைத் திருப்பதி யென்றும் அது வழங்கப்பெறும். அத்தலத்தில் ஆழ்வார் தமக்கு உண்டான ப்ராவண்யாதிசயத்தைத் தோழிமார்கள் தாய்மார்க்கு உரைப்பதாக இத்திருவாய்மொழி அமைந்திருக்கின்றது.

ஆழ்வார் பகவானை அநுபவிக்கும் திறத்தில் ......ரம், தோழி பாசுரம், மகள் பாசுரம் என்று மூன்று வகுப்புகளுண்டு. திருவாய்மொழி யாயிரத் துள்ளும் மொத்தம் நூறு பதிகங்கள் உள்ளன. இவற்றுள் எழுபத்து மூன்று பதிகங்கள் தாமான தன்மையிற் பேசினவை. இருபத்தேழு பதிகங்கள் பெண்பாவனையிற் பேசினவை. அவற்றுள், மகள் பாவனையில் பேசின பதிகங்கள் பதினேழு; தாய் பாவனையிற் பேசின பதிகங்கள் ஏழு; தோழி பாவனையிற் பேசின பதிகங்கள் மூன்று—என்று விவேகித்துக் கொள்க. தோழிப் பதிகங்கள் மூன்றுவன—(1) *தீர்ப்பாரையாமினி. (2) *துவளில் மாமணிமாடம் (இத் திருவாய்மொழி). (3) *கருமாணிக்கமலைமேல்.

மகள் பாசுரம், தோழி பாசுரம், தாய் பாசுரம் என்ற மூன்று வகையிலும் பதிகங்கள் அமையப்பெற்றது கீழ் நாலாம் பத்துப்போலே இந்த ஆறும் பத்துமாகும். இதில் *வைகல் பூங்கழிவாய்* மின்னிடை மடவார் *பொன்னுலகாளீரோ* என்ற மூன்று பதிகங்கள் மகள் பாசுரங்கள். *மாலுக்கு வையம் *உண்ணுஞ் சோறு* என்ற இரண்டு பதிகங்கள் தாய் பாசுரங்கள். இத்திருவாய்மொழிதான் தோழி பாசுரமாயிற்று.

தோழி சொல்வதுபோலவும் தாய் சொல்வதுபோலவும் மகள் சொல்வதுபோலவும் பாசுரங்கள் வெளிவந்தாலும் பாசுரங்கள் பேசுகிறவர் ஆழ்வாரேயாவர். ஒரு ஆறானது பல வாய்க்கால்களாகப் பெருகினாலும் அவற்றுக்குப் பிரதானமான பெயர் ஒன்றேயாயிருக்குமா போலே மேற்சொன்ன மூன்று நிலைமைகளாகச் சொல்மாலை வழிந்து புறப்பட்டாலும் * குருகூர்ச் சடகோபன் சொல்* என்று ஆழ்வார் பாசுரமாகவே தலைக்கட்டும்.

இப்பதிகத்தின் அவதாரிகையில் ஈட்டு ஸ்ரீஸூக்தி:—"இத்திருவாய்மொழிக்குக் கீழும் மேலுமெல்லாம் எம்பெருமானைக் கவி பாடினார். இத்திருவாய்மொழியில் தம் படி சொல்லுகிறார்.......தமக்கு பகவத் விஷயத்திலுண்டான ப்ராவண்யாதிசயத்தை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். 'இத்திருவாய்மொழி ஆழ்வார் ப்ரக்ருதி சொல்லுகிறது' என்று நம் முதலிகளெல்லாரும் போர விரும்பியிருப்பர்கள்....தாமே வேணுமாகாதே தம் படி பேசப்போதும்." (*)
இத்யாதிகள் இங்கு அநுஸந்தேயம். .... .... ... ...

---

# நீதிமன்றத்தில் ஓர் தீர்ப்பு.

காஞ்சீபுரம் தீபப்ரகாச தேவஸ்தானத்தைச் சேர்ந்த வேதாந்த வாசிரியர் புரட்டாசித் திருவோணத்தன்று தேவப்பெருமாளுடைய மங்களாசாஸனத்திற்கு எழுந்தருளும்போது தென்கலை மிராசுதாரர்கள் இயல் கோஷ்டியை வரதன் ஸன்னிதி கோபுர வாசலுக்குள் சாற்றின பின்பு, ஸ்வாமி வாஹன மண்டபத்தி லெழுந்தருளி யிருந்து படி களைந்து கைப் பலகையில் திருமலைக்குப் புறப்படும்போது தென்கலையார் முன்கோஷ்டியாக ஸ்தோத்ர பாடம் சொல்லிக்கொண்டு போவது, அவர்களின் பின்னே தாதாசாரியர்கள் ஸ்தோத்ர பாடம் சொல்லுவது—இப்படியாக மங்களாசாஸனம் முடிந்த பின்பு இயல் கோஷ்டியுடன் மாடவீதிப் புறப்பாடு கண்டருளித் தம் ஸன்னிதி சேர்வதென்று நெடுநாளைய வழக்கப்படியும் ஹைகோர்ட்டு தீர்ப்பின்படியும் நடந்துவருகின்றது. சில வருடங்கட்கு முன்பு திருமலை மேல் தேசிகப் பிரபந்தம் சொல்லவேணுமென்று வடகலையார் முயற்சி செய்ய, அதை டிரஸ்டி

களும் எண்டோமெண்டு போர்டு கமிஷனரும் புதுச் செய்கையென்று தடுத்துவிட்டார்கள். எண்டோமெண்டு கோர்ட்டில் பல வருஷங்கள் விசாரணை நடந்து இது தவறான செயல் என்று முடிவு செய்யப்பட்டது. அப்படி முடிவு செய்யப்பட்ட ஸமயம் புரட்டாசித் திருவோணத்தின் முதல் நாளாக இருந்தபடியால் (அவ்வாண்டில்) மறுநாள் நடைபெற வேண்டிய சாத்துமறைத் திருநாளை அறவே நிறுத்திவிட்டார்கள். அது தங்களுடைய துக்கம் அஸஹ்யம் என்று காட்டுவதற்காகவாம். பிறகு செங்கற்பட்டு ஸப் கோர்ட்டில் இதற்காக அஸல் ஸூட்டு போட்டார்கள். இது நாலைந்து வருஷங்களுக்கு மேலாகிறது. அந்த வ்யவஹாரம் விசாரணையாகி (10—8—62) வெள்ளிக்கிழமையன்று முடிவு பெற்றது. கோர்ட்டு காஸ்டுடன் ஸூட் டிஸ்மிஸ்ட் என்பதுதான் முடிவு. உள் விசேஷங்கள் பிறகு.

பக்தர்களுக்கு ஒரே ஒரு விஷயம் நாம் தெரிவிக்க விரும்புகிறோம். ஸகல ஆழ்வார்களுடையவும் ஸகல ஆசாரியர்களுடையவும் திருவவதார ஸ்தலங்களில் தமிழ்ப் பிரபந்தங்களையோ ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரங்களையோ பக்தர்கள் யதேஷ்டமாகச் சொல்லிக்கொள்வதற்கு எவ்விதமான தடையும் காணப்படவில்லை. “நாங்கள் இன்னது சொல்லவேணும்; இதற்கு அநுமதி கொடுக்கவேணும்” என்று நீதிமன்றத்திற் சென்று அபேக்ஷிப்பாருமில்லை. அபேக்ஷிக்க வேண்டிய ப்ரஸக்தியுமில்லை. ஆழ்வா ராசாரியர்களின் அவதார ஸ்தலங்களில் மட்டுமன்று. எந்த திவ்யதேசத்திலும் ஸகல ஆழ்வாராசாரியர்களினுடையவும் ஸ்தோத்ரங்களையும் பாடல்களையும் ஓளவின் கீழ் அநுஸந்திப்பது அநாதியாயும் நிராபாதமாயும் நடந்துவருவதைக் காணுகின்றோம். வேதாந்த வாசிரியர்க்கு மட்டும் புதிய புதிய கிளர்ச்சிகளும் தடையுத்தரவுகளும் தோன்றுவதற்கு என்ன காரணமென்பதை புத்திமான்கள் தம் தம் மனத்தினுள்ளே விமர்சிப்பது. விமர்சித்தால் புதுத்தெய்வம் கொண்டாடுந் தொண்டரென்பது எளிதில் புலப்படும்.

இங்ஙனம்,

**காஞ்சீபுரம். தி. த. பாஷ்யகாரர்.**

(ஷை தாவாவில் பிரதிவாதிகளில் ஒருவர்.)

## நமது பத்ரிகாபிமானிகளுக்கு அறிவிப்பு

1. நமது ஸ்ரீராமாநுஜனுடைய வுருவம் டபுல்க்ரவுன் என்பது. இப்போது உங்களுடைய கையில் திகழும் பத்ரிகையின் உருவமே அது. இதுதான் நமது பத்ரிகையின் நிரந்தரமான உருவம். ஆனால் சில ஸமயங்களில் இவ்வுருவத்திற்குரிய காகிதம் (Printing Paper) கிடைக்க சிரமமேற்பட்டால் அப்போது இதனில் சிறிது சிறிதான புல்ஸ்கேப் உருவம் கொள்ளப்படுகிறது. அதனால் பத்திரிகைகளை வரிசையாக பயிண்டு செய்து கொள்வதற்கு அஸௌகரியம் விளைகின்றதென்பதை நாம் அறியாமலில்லை. இத்தகைய அஸௌகரி இனிமேல் நேராதென்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம். இதே உருவத்தில் வெளிவரும்.

2. சந்தாபாக்கியுள்ளவர்கள் பலபேர்கள். அவர்களுக்கு நாம் கடிதமெழுதி நினைப்பூட்டவேண்டுமோ? பத்ரிகை கிடைத்து வாசிக்கும்போது பாக்கியிருப்பது தம்தமக்கே நினைவுக்கு வருமே. பத்ரிகையின் அபிவிருத்தியை உத்தேசித்து அவரவர்கள் ச்ரத்தையுடன் சந்தாபாக்கியை அனுப்பிவைப்பது நலம்.

3. நமது க்ரந்தமாலா கார்யாலயத்திலிருந்து ஸ்ரீராமாநுஜன் போலவே மற்றுமிரண்டு பத்ரிகைகளும் மாதந்தோறும் வெளிவருகின்றனவென்பதைப் பெரும்பாலும் உலகமறியும். அறியாதவர்களுக்கு இது தெரிவிக்கலாகிறது. வைதிகமனோஹரா என்பது ஸம்ஸ்க்ருத பாஷா பத்ரிகை. வடமொழியில் ஸாதாரண பரிசயமுள்ளவர்களுக்கும் எளிதாகப் புரியும் படியான சைலியில் ஸ்ரீராமாயண பகவத்கீதாதி தத்துவங்களைப்பற்றின வியாஸங்கள் இதில் வெளியிடப்படுகின்றன. இருபது ஆண்டுகளாக வெளிவருகின்றது. ஸம்ஸ்க்ருதாபிமானிகள் அவசியம் வாசிக்கவேண்டிய பத்ரிகை இது. இதற்கு வருடச்சந்தா 5 ரூ. ஆனாலும் வித்யார்த்திகளுக்கும், உபபத்தி குறைவாகவுள்ள பண்டிதர்களுக்கும் (2–50) பாதி சந்தாவே வைத்திருக்கிறோம். இதுகாறும் இப்பத்திரிகை மூலமாக வெளிவந்த நூல்களும் பெரிய வியாஸங்களும் ஏறக்குறைய நூறு உள்ளன. அவை தனியாகவும் கிடைக்கும். கியாடலாக் வரவழைத்துப் பார்த்துக்கொள்க. இதேபோல் தெலுங்கு பாஷையில் மாதந்தோறும் வெளிவரும் பத்ரிகைக்கு ஸ்ரீராமாநுஜபத்ரிக என்றே பெயர். இதுவும் ஸ்ரீராமாநுஜன் ஆரம்பித்த நாளிலேயே ஆரம்பிக்கப்பட்டு நடந்துவருகின்றது. இதில் தற்காலம் திவ்யப்ரபந்தங்களுக்கு ஆந்திரபாஷையில் டீகை வெளியிடப்பட்டு வருகின்றது. இதுவரை முதலாயிரத்தில் பெருமாள் திருமொழி, திருச்சந்தவிருத்தம் தவிர மற்ற எட்டுப் பிரபந்தங்களுக்கும் டீகை வெளிவந்து தனிப் புத்தகங்களாகக் கிடைக்கின்றன.

4. திவ்யப்பிரபந்தங்களுக்கு ஹிந்தீ பாஷையிலும் ஸம்ஸ்க்ருத பாஷையிலும் வியாக்கியானம் இங்கு அச்சிடப்பட்டுவருவது பெரிய காரியம். அதைப்பற்றித் தெரிந்துகொள்ள விருப்பமுள்ளவர்கள் ரிப்ளைகார்டு எழுதிக்கேட்டுத் தெரிந்துகொள்வது. இங்ஙனம்,

சின்னகாஞ்சீபுரம் க்ரந்தமாலா கார்யாலயத்தலைவர்.

## பாம்பே நகரத்தில் பிரசாரகர்கள்

நமது க்ரந்தமாலாபதிப்புகளை பாம்பே நகரத்தில் பலர் பெற விரும்பியதனால் அவ்விடத்தில் (1) Sri T. V. S. Giri, c/o Giri Trading Agency, 25, Bank St., Bombay-1. (2) Religious Book Sellers & Publishers, near Matunga Railway Station (C.R) Matunga, Bombay-19. இவ்விரண்டிடங்களிலும் நமது பதிப்புகள் கிடைக்கும்.

## திருவல்லிக்கேணி யுபந்யாஸமாலை

சென்ற ஜூன் மாதத்தில் திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமி தேவஸ்தான தர்மகர்த்தாக்கள் ஷை தேவஸ்தானத்தில் 10 உபந்யாஸங்கள் செய்யவேணுமென்று நம் ஸ்ரீராமாநுஜன் ஆசிரியரைக் கேட்டுக்கொண்டார்கள். அதன்படி அங்கு 10 உபந்யாஸங்கள் நடைபெற்றன. அவையாவன—1. ஸ்ரீ பார்த்தஸாரதியின் பிரபாவம். 2, 3, 4, கீதையின் ஷட்கத்ரயம். 5. அழகியசிங்கர் பிரபாவம். 6, 7, 8. திருமந்த்ரார்த்த, த்வயார்த்த, சரமச்லோகார்த்தங்கள். 9. எம்பெருமானார் பிரபாவம் 10. "நம் ஆசாரியர்கள்." ஆக இப்பத்து உபந்யாஸங்கள் நிகழ்ந்தன. இவற்றில் 1 to 4 உபந்யாஸங்கள் அம்ருதலஹரீ பத்ரிகையிலும் பக்தன் பத்ரிகையிலும் அச்சாகி வெளிவந்திருக்கின்றன. மற்ற ஆறு உபந்யாஸங்கள் இப்போது இவ்விதழின் வாயிலாக வெளிவருகின்றன. இந்த 10 உபந்யாஸங்களும் சேர்ந்த தனிப்புத்தகமும் க்ரந்தமாலா ஆபீஸில் 2 ரூபா விலைக்குக் கிடைக்கும். "திருவல்லிக்கேணி ஸன்னிதி யுபந்யாஸ மாலை" என்பது நூலின் பெயர். ... (*)

ஸ்ரீ:

# திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதி ஸந்நிதி உபந்யாஸமாலையில் எம்பெருமானார் வைபவம்.

---

குருபரம்பராப்ரபாவம் முதலிய நூல்களில் காணப்படும் ஸ்வாமி வைபவம் ஸுப்ரஸித்தமாகையாலே அதை விவரித்துப் போதுபோக்குகையை விட்டு, ஆண்டாள் நாச்சியார் திருமொழியில் * விண்ணீல மேலாப்புப் பதிகத்தில் பாட்டுத்தோறும் காட்டியருளின எம்பெருமானார் வைபவம் ஈண்டு உபந்யஸிக்கப்படுகின்றது. திருவேங்கடமுடையான் பக்கலிலே மேகத்தைத் தூது விடுவதாக இப்பதிகம் அமைந்துள்ளது. காளிதாஸ மஹாகவி மேகஸந்தேச மென்றொரு சிறு காவிய மியற்றி, அதில், குபேர சாபத்தினால் பூலோகத்திலே வந்து சேர்ந்த ஒரு யக்ஷன் தன்னுடைய மனைவிபாடே மேகத்தைத் தூது விடுவதாக வைத்தனன். அதில் ஒரு சுலோகம்—

“ தூமஜ்யோதிஸ் ஸலிலமருதாம் ஸந்நிபாத: க்வ மேகஸ்
ஸந்தேசார்த்தா: க்வ படுகரணை: ப்ராணிபி: ப்ராபணீயா:,
இத்யௌத்ஸுக்யாத் அபரிகணயந் குஹ்யகஸ் தம் யயாசே
காமார்த்தா ஹி ப்ரக்ருதிக்ருபணாச் சேதநாசேதநேஷு ”.

என்பது. இதன் கருத்தாவது—புகையும் சோதியும் தண்ணீரும் காற்று மாகிற அசேதநபதார்த்தங்களின் கூட்டரவே மேகமெனப்படுகிறது; ஆகவே மேக மென்பது அறிவில்லாப் பொருளென்று தேறிற்று. இதன் மூலமாக ஸமாசாரம் சொல்லி யனுப்புவது எப்படி? இங்குச் சொல்லுகிற ஸமாசாரத்தைத் தெரிந்து கொள்ளவும் அங்குச் சென்று அதை விவரித்துச் சொல்லவும் தகுதியான கரண பாடவமுள்ளவர்களை யன்றோ தூதுவிடவேணும். இந்த யோக்யதையற்ற மேகத்தைத் தூது விட்டு லாபமென்ன? எப்படி இவன் தூது விடுகிறான்? என்று கவிதானே ஒரு சங்கையைக் கிளப்பிக் கொண்டு அதற்குப் பரிஹாரம் தானே சொல்லி முடித்தான் “காமாதுரனாகையாலே சேதநா சேதநவிவேகமற்றுச் செய்கிற காரியமிது” என்று சொல்லித் தலைக்கட்டினான்.

ஆழ்வார்கள் பக்ஷிகளையும் மேகத்தையும் எம்பெருமான் பக்கலிலே தூது விடுவதுண்டு. கீழே காட்டிய சங்கை இங்கு முண்டாகலாம். காளிதாஸன் போலே அவிவேக நிபந்தனமான அசேதந தூத்ய மென்று முடிவு செய்திடாமல் ஸதாசார்யர்களைத் தூது விடுவதாக மிகச் சிறந்த உபபத்திகளுடன் நிர்வஹித்துள்ளார்கள். ஆசார்ய ஹ்ருதயத்தில் “சேர்ப்பாரைப் பக்ஷிகளாக்கி ஜ்ஞானகர்மங்களைச் சிறகென்று குருஸப்ரஹ்மசாரி புத்ர சிஷ்ய ஸ்தாநே பேசும்” என்கிற சூர்ணையினால் பக்ஷிஸாமாந்யத்திற்கு ஸ்வாபதேசமும், “விவேகமுகராய் நாலுரைத்து” என்று தொடங்கிச் சில சூர்ணைகளாலே அன்னம் நாரை கொக்கு குருகு கிளி பூவை குயில் மயில் முதலான பக்ஷி விசேஷங்களுக்கு ஸ்வாபதேசமுமருளிச் செய்து, “பூண்டநாள் சீர்க்கடலையுட்கொண்டு” என்று தொடங்கும் சூர்ணையினால் “பரஸம்ருத்தியே பேறான அன்புகூரு மடியவர் உறையிலிடாதவர் புயற்கையருள்மாரி குணந்திகழ் கொண்டல் போல்வாரை மேக மென்னும்” என்று, முதலாழ்வார்கள் திருமழிசைப்பிரான் திருமங்கை மன்னன் எம்பெருமானார் போல்வார் மேகமாகச் சொல்லப்படுபவர்களென்று அருளிச் செய்யப்பட்டுள்ளது.

ஆசாரியர்க்கும் மேகத்திற்கும் பல வகைகளாலே ஸாம்யமுண்டு; பதின்மூன்று வகைகளாலே ஸாம்யத்தை இங்கு நிரூபிப்போம்,

1. மேகமானது கடல்நீரை முகந்துகொண்டு வர்ஷிக்கும். ஆசிரியர்கள் * ச்ருதி ஸாகராத் * என்றும் * த்ராவிட வேத ஸாகரம் * என்றும் சொல்லப்படுகிற உபய வேதக்கடலிலுள்ள ரஸப்பொருள்களை முகந்துகொண்டு வர்ஷிப்பர்கள்.

2. மேகமானது உப்புத்தண்ணீரையும் தன் வாய்க்கொண்டு மிக மதுரமாக்கி வர்ஷிக்கும். ஆசிரியர்கள் சாஸ்த்ரக் கடல்களிலே விரஸமாகக் காணும் பொருள்களையும் தங்கள் வாக்காலே மிக மதுரமாக்கி உபந்யஸிப்பர்கள்; "மேகம் பருகின ஸமுத்ராம்புபோலே நூற்கடற்சொல் இவர் வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோபஜீவ்யமாமே" என்கிற ஆசார்யஹ்ருதயஸ்ரீஸூக்தியை இங்கே காண்க.

3. மேகமானது * உயிரளிப்பான் மாகங்களெல்லாந்திரிந்து * என்கிறபடியே உலகமெல்லாம் சென்று வேண்டினவிடத்தே பெய்யும். ஆசிரியர்கள் * எண்டிசையும் பேர்த்தகர நான்குடையான் பேரோதிப் பேதைகாள்! தீர்த்தகர ராமின் திரிந்து * என்கிற பூதத்தாழ்வாரது நியமனப்படியே சிஷ்யர்களுள்ளவிட மெங்கும் ஸஞ்சரித்து நல்ல அர்த்தங்களைப் பெய்து உபதேசிப்பர்கள்.

4. மேகமானது பள்ளமான விடங்களிலே பெய்து அவற்றைப் பூரிக்கும். ஆசிரியர்களும் *நீசனேன் நிறையொன்றுமிலேன்*என்றிருக்கும் பரமஸாத்விகர்களிடத்தே அர்த்தங்களைத் தேக்கிவைப்பர்கள்.

5. மேகமானது எப்போதும் பெய்யாது; சில கால விசேஷங்களிலே பெய்யும். ஆசிரியர்களும் தாபம் மிக்கவர்கள் வந்து வேண்டுங் காலங்களிலும், *மூலைக் கடுப்பாலே தரையிலே பீச்சுங் கணக்கிலே தாங்கள் தரிக்கைக்காக வாய்விட்டுப் பேச வேண்டிய காலங்களிலும் அர்த்தங்களை வர்ஷிப்பர்கள்.

6. மேகம் பெய்யவேண்டிய காலங்களிலே பெய்யாவிடில் உலகில் தீங்கு மலியும். ஆசிரியர்களும் உபதேசிக்கவேண்டிய காலங்களிலே உபதேசியா தொழியில் தேஹாத்ம ப்ரமம், ஸ்வஸ்வாதந்த்ரிய ப்ரமம், அந்ய சேஷத்வ ப்ரமம், ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயம் ஆபாஸ பந்து ஸங்கம் விஷய ப்ராவண்யம் முதலான தீங்குகள் மலியும்.

7. * திங்கள் மும்மாரிபெய்து * என்கிறபடியே மேகமானது மூன்று மழை பெய்து வாழ்விக்கும். ஆசாரியர்களும், ரஹஸ்யத்ரயம், தத்வத்ரயம், (கீதையில்) ஷட்கத்ரயம், தத்வ ஹித புருஷார்த்தங்கள், பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகள் என்றிங்ஙனேயான மும்மாரிகளைப் பெய்து வாழ்விப்பர்கள்.

8. மேகமானது எவ்வளவு வர்ஷித்தாலும் வர்ஷித்தோமென்றிராமே மேன்மேலும் வர்ஷிக்கையில்தானே ஊக்கங்கொண்டிருக்கும். ஆசாரியர்களும் உபதேசங்களையும் உபந்யாஸங்களையும் எவ்வளவு நிகழ்த்தினாலும் த்ருப்தி பெறுமே மேன்மேலும் ஸ்ரீஸூக்திகளை வர்ஷிக்கக் குதூஹலங்கொண்டே யிருப்பர்கள்.

9. மேகமானது கைம்மாறு கருதாமே தன்பேறாக வர்ஷிக்கும். ஆசாரியர்களும் ஒரு ப்ரயோஜனத்துக்காகவன்றிக்கே அநந்யப்ரயோஜனர்களாய்ப் பொழிவர்.

10. மேகமானது சில ஸமயங்களிலே நாலு சிறு துளிகளைப் பெய்து விட்டுப் போய் விடும்; மற்றுஞ் சில ஸமயங்களிலே * கடல்வாய்ச் சென்று மேகம் கவிழ்ந்திறங்கிக் கதுவாய் பட நீர் முகந்தேறி யெங்குங் குடவாய்பட நின்று மழை பொழியும் * * தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல் * என்கிறபடியே கனக்கப் பொழியும். ஆசாரியர்களின்படியு மிப்படியே. செவியிலே நாலு வார்த்தைகளைச் சொல்லி நிற்கிற காலமுமுண்டு; * ஏற்ற கலங்க ளெதிர்பொங்கி மீதளிப்ப மாற்றாதே பால் சொரியும் வள்ளல் பெரும் பசுக்கள்போலே வாங்கக் குடம் நிறையப் போதும் போது மென்னும்படி பொழிவது முண்டு.

11. மேகம் சில விடங்களிலே சில காலங்களிலே பெய்கிற நீரானது முத்தாகி மேன்மை பெறும். ஆசாரியர்கள் சில வ்யக்தி விசேஷங்களிலே உபதேசிக்கிற அர்த்த விசேஷங்கள் முத்துப்போலே பின்புள்ளார்க்கும் அணிகலமாயிருந்து அநர்க்கமா யிருக்கும்.

12. மேகம் பெய்த நீர், நதிகள் குளங்கள் ஏரிகள் கிணறுகளாகிய இவற்றில் சேர்ந்தால் அனைவர்க்கும் உபஜீவ்யமாய், மற்றை யிடங்களில் தேங்கினல் வாய் வைக்க வொண்ணுததாய்ப் போம். ஆசாரியர்கள் வர்ஷித்த அர்த்தங்களும் நல்ல ஞானத்துறைகளிலே சேர்ந்தால் * "பூர்வே பூர்வேப்யோ வச ஏததூசு:" என்ற காடக ச்ருதியின் கணக்கிலே உபதேசபரம்பரையிலேவந்து உபஜீவ்யமாகும்; அவையே அநதிகாரிகள் பக்கலிலே தேங்கினல் அப்ரயோஜநமாயொழியும்.

13, மேகம் * எத்தனையும் வான் மறந்தகாலத்தும் பைங்கூழ்கள் மைத் தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும் * என்கிறபடியே பயிர்களால் ப்ரதீக்ஷிக்கப்பட்டு அவற்றை வாழ்விக்கும். * நீர்காலத் தெருக்கிலம் பழவிலைபோல் வீழ்வேனை * என்கிறபடியே எருக்கிலைபோல்வனவற்றை மாளச்செய்யும். ஆசாரியர்கள்படியு மிப்படியே; * நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன, நாரணனைக்காட்டிய வேதம் களிப்புற்றது, தென்குருகைவள்ளல் வாட்டமிலா வண்தமிழ் மறை வாழ்ந்தது * என்ற இராமாநுசநூற்றந்தாதி காண்க. .... .... ... (*)

இனி * **விண்ணீலமேலாப்பு** என்கிற நாச்சியார் திருமொழிப் பதிகத்தில் பாசுரந் தோறும் ஆண்டாள் மேகத்திற்கு இடுகிற அடைமொழிகள் எம்பெருமானுர்க்கு மிகவும் பொருத்தமா யிருக்கின்றன வென்பதை ஈண்டு நிரூபிப்போம்.

1. முதற்பாட்டில், * மேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள்! * என்றுள்ளது; மேலாப்பாவது மேற்கட்டு; விதானமெனப்படும். அது எப்படியிருக்கு மென்றல் விசித்திரமான வர்ணங்கள் அமையப் பெற்றிருக்கும். ஸுதர்சந சதகத்தில் ஜ்வாலா வர்ணநத்தில் ஐந்தாவது ச்லோகம்—*ச்யாமம் தாமப்ரஸ்ருத்யா க்வசந பகவத:* என்பது. அதில் "வ்யாதங்வாநம் விதாநச்ரிய முபசிநுதாத் சர்ம வச் சக்ரபாநம்" என்பது முடிவு. ஸுதர்சநஜ்வாலையே விதானமாகச் சொல்லிற்று. இனி ஸ்வாமியைப் பற்றிக்கேண்மின். இராமாநுசநூற்றந்தாதியில்* அடையார்கமலத்தலர்மகள் கேள்வன் கையாழி யென்னும் படையோடு........இராமனுசமுனியாயினவிந்நிலத்தே * என்கிற பாசுரத்தாலும், யதிராஜஸப்ததியில் * "வவ்ருதே பஞ்சபிராயுதைர்முராரே:" * என்ற சுலோகத்தாலும் எம்பெருமானுர் பஞ்சாயுதாழ்வார்களின் தோற்றமென்று காட்டப் பட்டது. சரித்திரவகையில், ஸ்வாமி சேஷாவதாரர் என்கிறதத்துவம் இருக்கச் செய்தேயும் ப்ரபாவ விசேஷங்களை நோக்கிப் பலபடியாகவும் உல்லேகிக்க ஔசித்ய முண்டாகையாலே பஞ்சாயுதாழ்வார்களின் தோற்றமாக உல்லேகித்ததும் ஒக்கும். "அஸ்த்ரக்ராமாக்ரேஸரம்" என்று பட்டரும், * அஸ்த்ரக்ராமஸ்ய க்ருத்ஸ்நஸ்ய ப்ரஸூதிம் யம் ப்ரசக்ஷதே, ஸோவ்யாத் ஸுதர்சநோ விச்வம் ஆயுதை: ஷோட சாயுத: * என்று தேசிகரும் பணித்தபடியே ஆயுதத்தலைவர் திருவாழியாழ்வானே யாதலாலும் அந்தத்திருவாழியாழ்வான் (ஸுதர்சந சதகத்தில்) விதானமாக வரு ணிக்கப்பட்டிருப்பது கீழே விவரிக்கப்பட்டிருத்தலாலும் இங்கு ஆண்டாள் பாசு ரத்தில் மேலாப்பு என்றது உடையவர் திருவாழியாழ்வான் தோற்றமென்று உத்ப் ரேக்ஷிக்கவுரியர் என்பதைக் காட்டுவதாகக் கொள்ளத்தகும். * தொடுத்து மேல் விதானமாய பௌவநீராவணை * என்ற மழிசையர்கோன் பாசுரப்படியே திரு வனந்தாழ்வானை விதானமாகக் கொண்டு ஸ்வாமியின் சேஷாவதாரத்வம் தெரி விக்கப்பட்டதாகக் கொள்ளுதல் மிக நன்று. கண்ணன் மதுரையில் நின்றும் திரு வாய்ப்பாடிக்கெழுந்தருளுகையில் ஆதிசேஷனே விதானமாயிருந்தனனன்றே.

2. [மாமுத்த நிதி சொரியும் மாமுகில்காள்.] எம்பெருமானாராகிற காளமேகம் நவநிதிகளைச் சொரிந்தருளிற்று. அதாவது, ஸ்வாமி திருவாய்மலர்ந்தருளின திவ்ய க்ரந்தங்கள் ஒன்பது; (1) ஸ்ரீபாஷ்யம். (2) வேதாந்த தீபம். (3) வேதாந்த ஸாரம். (4) வேதார்த்த ஸங்க்ரஹம். (5) கீதா பாஷ்யம். (6) நித்யமென்கிற பகவதாராதன ப்ரயோகம். (7) சரணாகதி கத்யம். (8) ஸ்ரீரங்க கத்யம். (9) ஸ்ரீவைகுண்ட கத்யம், இவ்வொன்பது திவ்ய க்ரந்தங்களும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குச் சேமவைப்பான நிதிகளாதலால் * மாமுத்த நிதி சொரியும் மாமுகிலென்றது மிக்க பொருத்தமாயிற்று. முத்துப்போன்ற ஆசாரியர்களை ஸ்தாபித்தவரென்பதும் விவக்ஷிதம். சுத்தஸாத்விகர்கள் முத்தாகச் சொல்லப்படுவர்கள்.

3. மூன்றாம் பாட்டில் * அளியந்த மேகங்காள்!* என்பது விளி; தயை பண்ணுமியல்வுடைய மேகங்களே.! என்றபடி. க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யரென்று எம்பெருமானார்க்கே ப்ரஸித்தியாதலால் இது மிக்கபொருத்தமாகும்! ஆசார்யஹ்ருதயத்தில் "நண்ணாதார் மெய்யிலூனைசை நிர்வேதத்தோடே..." என்று தொடங்கி "தாய்க்கும் மகனுக்கும் தம்பிக்கும் இவர்க்கும் இவரடிபணிந்தவர்க்குமே இவையுள்ளது' என்றருளிச்செய்தது இங்கே அவசியாநுஸந்தேயம். இவரடி பணிந்தவரென்றது *மாறனடிபணிந்துய்ந்த எம்பெருமானாரை.

4. நாலாம் பாட்டில் * மின்னுகத் தெழுகின்ற மேகங்காள்!* என்பது விளி; மின்னல் தோன்றப்பெறாத மேகம் அவ்வளவாக வர்ஷிக்கமாட்டாது. மின்னலுள்ளபோது கனத்த வர்ஷம் அணித்தென்று நிச்சயிக்கும்படி யிருக்கும். ஸுதர்சந சதகத்தில் * "க்ருஷ்ணம் போதஸ்ய பூஷா" * என்கிற ச்லோகத்தில் * ப்ராப்தாம் ஆவேதயந்தீ உத்படாம் வ்ருஷ்டிம் சஞ்சலா * என்றதும் காண்க. ஆகவே, பெய்யாத வெறும் மேகமன்றிக்கே நன்கு பெய்யும் மேகமே! என்றபடியாய் எப்போதும் அர்த்தங்களை வர்ஷித்துக்கொண்டேயிருக்கு மெம்பெருமானாரைச் சொல்லிற்றாகிறது. அன்றியே, ஆகத்து—திருமார்பிலே, மின் எழுகின்ற—மின்னற்கொடிபோன்ற யஜ்ஞஸூத்ரம் விளங்கப்பெற்ற எம்பெருமானாரே! என்றதாகவுமாம். மதாந்தர ஸந்யாஸிகளைப்போலே யஜ்ஞோபவீதத்தை அறுத்துப்பொகடுகையன்றிக்கே * உபவீதிநம் * விமலோப வீதம் * இலங்கிய மின்னூல (முந்நூல்) வாழி * என்கிறபடியே அந்த யஜ்ஞோபவீதம் மிக அழகாக விளங்குந்தன்மை வக்தவ்யமேயாகும். "ஸௌதாமநீஸவர்ண ஸௌவர்ண யஜ்ஞ ஸூத்ரம்" ஆகையாலே மின்னலாகச் சொல்லிற்று. அன்றிக்கே. ஆகத்து—திருமேனியிலே, மின் எழுகின்ற · மின்னல்போல் பளபளவென்று திகழ்கின்ற காஷாயம் காட்சிதரப்பெற்ற எம்பெருமானாரே! என்றதாகவுமாம்.

5. ஐந்தாம் பாட்டில் * வான் கொண்டுகிளர்ந்தெழுந்த மாமுகில்காள்!* என்று விளியுள்ளது. வான் என்று பரமபதம்; அதைக் கையிலே கொண்டுகிளர்ந்தெழுந்த மேகமாம் எம்பெருமானார். இவ்விடத்தில் * ஞானங்கனிந்த நலங்கொண்டு நாடொறும் நைபவர்க்கு வானங்கொடுப்பது மாதவன், வல்வினையேன் மனத்திலீனங்கடிந்த இராமானுசன் தன்னையெய்தினர்க்கு அத்தானங்கொடுப்பது தன்தகவென்னுஞ்சரண்கொடுத்தே * என்கிற நூற்றந்தாதிப்பாசுரம் எமது விரிவுரையோடுங் காணத்தக்கது. அன்றிக்கே, சரணாகதிகத்யத்தில் * அஸ்து தே, தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே * என்ற விடத்திற்கு ச்ருதப்ரகாசிகாசார்யர் இட்டருளின வியாக்கியானத்தின் படியே, வான் கொண்டு—பரமபதத்தை தமக்கும் தம்மடியார்க்கும் உரித்தாகப் பெற்றுக்கொண்டு கிளர்ந்தெழுந்த எம்பெருமானாரே! என்றபடியுமாம். அன்றிக்கே * லோயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்தாம் யத்ஸம்பந்தாத் அமநுத கதம் வர்ண்யதே கூரநாத: * என்கிற சுலோகத்திலமைந்த ஐதிஹ்யத்தின்படியே கூரத்தாழ்வான் ஸம்பந்தத்தாலே தமக்குப் பரமபதம் கரஸ்தமென்று கொண்டு கிளர்ந்தெழுந்த எம்பெருமானாரே! என்றதாகவுமாம்.

6. ஆறாம் பாட்டில் * சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த தண்முகில்காள்!* என்று விளியுள்ளது. ஜலம் என்கிற வடசொல் சலமெனத் திரிவது போலவே ச்சலம் என்கிற வடசொல்லும் சலமெனத் திரியும். சலமாவது கபடம். யாதவப்ரகாசனுடைய கபடத்தை, கொண்டு—யாத்திரை வழியில் தெரிந்துகொண்டு, திரும்பினஸ்வாமியே! என்றபடி. அங்ஙனம் திரும்பிவருகையில் தேவப்பெருமாளுக்குவிடாய்தீரத் தீர்த்தமளித்ததனால் ஜலங்கொண்டு கிளர்ந்தெழுந்த வென்பதும் மிகப் பொருந்தும். வீரசைவனுன சோழராஜனுடைய கபடத்தையறிந்து கிளர்ந்தெழுந்த கதையுங்கொள்க.

7. ஏழாம்பாட்டில் * சங்கமாகடல் கடைந்தான் தண் முகில்காள் !* என்று விளியுள்ளது. கடல்கடைந்து அமுதங்கொண்டவனுன எம்பெருமானுடைய ஸம்பந்தம்பெற்ற மேகமே! என்று அந்யாபதேசத்தில் சொன்னபடி. ஸ்வாபதேசத்தில் * மறைப்பாற் கடலைத் திருநாவின் மந்தரத்தாற்கடைந்து, துறைப்பால் படுத்தித் தமிழாயிரத்தின் சுவையமிர்தம், கறைப் பாம்பணைப்பள்ளியான் அன்பரீட்டங் களித்தருந்த நிறைப்பான் * என்று பிள்ளைப் பெருமாளையங்கார் (கலம்பகத்தில்) பணித்தபடியே மறைப்பாற்கடலைக் கடைந்து அமுதமளித்தவரான நம்மாழ்வாருடைய ஸம்பந்தம்பெற்ற எம்பெருமானுரே! என்றபடி; * பாமன்னுமாறனடிபணிந்துய்ந்தவன்—இராமானுசன் * பராங்குசபாதபக்தம் ராமாநுஜம் * என்றிறே நிரூபகம்.

8. எட்டாம்பாட்டில் * கார்காலத் தெழுகின்ற கார்முகில்காள் !* என்று விளியுள்ளது. மழை காலத்தில் எழுகின்ற மேகமே! என்றபடி; * அவிவேககநாந்ததிங்முகே பஹுதா ஸந்தததுக்கவர்ஷிணி, பகவந் பவதுர்திநே* என்று ஆளவந்தாரருளிச்செய்த ஸம்ஸார மழைகாலத்திலே தோன்றிய எம்பெருமானுரே! என்றபடி.

9. ஒன்பதாம் பாட்டில் * மதயானை போலெழுந்த என்றதைக் கொண்டே இராமாநுச நூற்றந்தாதியில் * பண்டருமாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய்மதமாய் விண்டிட எங்களிராமானுச முனிவேழம் * என்று அமுதனாருளிச் செய்தார். வேழம்—யானை. பெருகுமதவேழம் * என்கிற பூதத்தார் பாசுரத்தின் விசேஷார்த்தமும் இங்குப் பொருத்தமாகும். அது நம்மால் பலவிடங்களில் விவரிக்கப்பட்டுள்ளது.

ஆக ஒன்பது பாசுரங்களிலுமுள்ள விசேஷண ஸ்வாரஸ்யத்தை நன்கு நோக்குமிடத்து ஆண்டாள் எம்பெருமானுரையே மேகமாக விளித்துத் தூதுவிட்டாளென்னுமிடம் தெளிவாமென்பது சுருக்கமாக நிரூபிக்கப்பட்டதாயிற்று. (*)

---

## திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதி ஸன்னிதியுபந்யாஸமாலையில் அழகியசிங்கர் ப்ரபாவம்.

"பள்ளியிலோதிவந்த தன் சிறுவன் வாயிலோராயிரநாமம்
ஒள்ளியவாகிப் போத வாங்கதனுக் கொன்றுமோர் பொறுப்பிலனுகிப்
பிள்ளையைச் சீறி வெகுண்டு தூண்புடைப்பப் பிறையெயிற்றனல்விழிப் பேழ்வாய்த்
தெள்ளிய சிங்கமாகிய தேவைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே."

[பெரிய திருமொழி 2—3—8.]

ஸ்ரீநரஸிம்ஹாவதார சரிதம் ஜகத்விக்க்யாதமாதலால் அதைப் பன்னியுரைப்பதை விட்டு ஸாரஸங்க்ரஹமாகச் சொல்லி முடித்து, இவ்வவதாரத்திலுள்ள பல நுட்பங்களைத் தெரிவிப்போம். வராஹாவதாரத்தில் விறலழிந்தொழிந்த ஹிரண்யாக்ஷனுடைய உடன் பிறந்தவனுன ஹிரண்யகசிபுவென்னு மசுரனை நிரஸிப்பது வியாஜமாக, அவன் மகனுன ப்ரஹ்லாதாழ்வானை யநுக்ரஹிப்பதற்காகவாயிற்று இவ்வவதாரம். இரணியன் அரிய பெரிய தவம்புரிகையில் அதற்கு உவந்து பிரமன்

பிரத்யக்ஷமானபொழுது வேண்டியவாறெல்லாம் வரங்கள்வேண்டி அவற்றைப் பிரமன் கொடுக்கப்பெற்ற பின்னரே அவன் தவத்தினின்று மீண்டனன். பஞ்ச பூதங்களுக்கும் தனித் தனி எவ்வளவு வலிமையுண்டோ அவ்வளவும் அவன் ஒருவனே பெற்றிருந்தான். அப்படிப்பட்ட அவனது வலிமை அரனுக்குமயனுக்கும் அளவிட்டறிந்து அழிக்க வொண்ணாததாயிருந்தது. இந்த ஓர் அண்டத்தில் மாத்திரமேயன்றி எல்லா அண்டங்களிலும் அவன் பெயர் அனைவராலும் போற்றப்பட்டு வந்தது.

உலகங்களில் அவரவர்கள் வைதிகலௌகிக சமயங்களில் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியின் திருநாமங்களைக் கூறும் வழக்கத்தை அறவே யொழிக்கும்படி அச்சமுறுத்தித் தனது இரணியனென்ற பெயரையே கூறும்படி செய்து வந்தனன். அன்றியும், முனிவர் முதலியோர் யாகங்களில் மந்திரபூர்வமாகத் தேவர்களை யுத்தேசித்து இட்டு ஓமஞ்செய்கிற ஹவிர்ப்பாகங்களை யெல்லாம் தானே கைக் கொண்டு உண்பான். யோகப் பயிற்சியில் தேர்ந்த முனிவர்களும் தம் யோகபலத்தாற் பெறும் பதவிகளைப் பெறாது அவனால் இழந்து விட்டார்கள். தேவர்களும் அவனது பாதங்களை யன்றி வேறொன்றைப் பூசிக்க விரும்பாதாராயினர். அவன் தான் பெற்ற வரத்தினால் பெண்களாலும் ஆண்களாலும் நபும்ஸகராலும் மற்றுமெந்தப் பிராணி வர்க்கங்களாலும் இறக்கமாட்டான், பூமியிலும் சாகமாட்டான், ஆகாயத்திலும் சாகமாட்டான். வீட்டினுள்ளேயும் வெளியிலேயும் சாவான். அஸ்த்ர சஸ்த்ரங்களாலும் கொலையுண்ண மாட்டான். இரவிலுஞ் சாவான். பகலிலுஞ் சாவான்- இங்ஙனே பலவகைகளையும் பகுத்துக் கூறிச் சாவாவரம் பெற்றிருந்தான்.

அவனுக்கு அநுஹ்லாதன், ஹ்லாதன், ப்ரஹ்லாதன், ஸம்ஹ்லாதனெனப் புதல்வர் நால்வரிருந்தனர். அவர்களுள் ப்ரஹ்லாதன் மிகச் சிறந்த அறிஞன். தூயவர்களில் தலைவனான தூயவன். பகவத் பக்தர்களில் மேம்பட்ட மஹா பக்தன். பல சொல்லியென்? ஸகல ஸத்குண ஸம்பன்னன். இளையோனான அவனைத் தந்தையாகிய இரணியன் வெகு அன்போடும் ஆதரவோடும் வளர்த்து வந்து மிக்க உவப்புடனே ஒரு நன்னாளில் கல்விபயிலத் தொடங்குமாறு கட்டளை யிட்டனன். உடனே அசுரகுருவை வரவழைத்து 'என் அருமைக் குழந்தைக்குக் கல்விபயில்விப்பாயாக' என்று சொல்லிக் குமாரனைக் குருவிடம் ஒப்புவித்தனன். உடனே மைந்தனைப் பள்ளிக்கு அழைத்துச் சென்று கல்வி கற்பிக்கத் தொடங்கிய ஆசிரியன் "ஹிரண்யாய நமஃ" என்று முந்துறச் சொல்லி ஆரம்பம் செய்கிற வழக்கப்படி ப்ரஹ்லாதனை நோக்கிக் கட்டளையிட்டவுடனே அச்சிறுவன் தனது இரண்டு காதுகளையும் இரண்டு கைகளால் நன்றாக மூடிக்கொண்டு 'பெரியோனே! நீ சொன்னபடி சொல்வது நல்லொழுக்கமன்று, முறைக் கேடு' என்று கூறி மறுத்து, வேதாந்த விழுப்பொருளான உண்மைக் கடவுளின் திருநாமத்தை வெளியிட்டுக் கூறினான். திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்தை உரக்க உச்சரித்து உள்ளெலாமுருகிக் குரல் தழுத்து உடம்பெலாம் கண்ணீர் சோர நின்று முடிமீது அஞ்சலிசெய்து ஸ்ரீமந்நாராயணனைத் தியானித்து உள்ளம் பூரித்திருந்தான். அதுகண்டு அந்தக் குரு உள்ளமும் உடம்பும் நடுங்கப்பெற்று, 'கெடுவாய்! குருவாகிய என்னையுங் கெடுத்து மாணாக்கனாகிய உன்னையுங் கெடுத்துக்கொண்டாய்; நமது பகைவர்களான அந்தத் தேவர்களும் சொல்லத்தகாததாய் என் வாயால் அநுவாதம் செய்யவும் தகாததானவொரு வார்த்தையை நீ சொல்ல மனங்கொண்டது என்னே! இது என்ன அநியாயம்! இப்படியும் ஒரு காரியம் செய்துவிட்டாயே! எனறு பொடிந்தான். அதற்கு அவன் 'குரவரே! என்னை நான் ஈடேறச் செய்துகொண்டேன், எனது தந்தையையும் ஈடேற்றினேன்; எனக்குக் குருவாக அமைந்த உம்மையுமீடேற்றி இவ்வுலகத்தின்கணுள்ள எல்லாவுயிர்களையு மீடேற்றத் தொடங்கி முதுவேதத்தின் ஸாரமாகிய நாராயண நாமத்தைச் சொன்னேன், இதில் என்ன குற்றம்? என்ன, [குரு] பயலே! உன் தந்தையானவர் தேவர்களனைவர்க்கும் தலைவர்களான திரிமூர்த்திகளுக்கும் தலைவர்;

அவரது திருநாமத்தை மதித்திருக்கின்ற என்னிற் காட்டிலும் நீ அறிஞனோ? அடா! இப்பொழுது நீ சொன்ன பெயரை மறுபடியுஞ்சொல்லி என்னைக் கெடுக்காதே கொள். என்ன, [பிரஹலாதன்] முழுமுதற் கடவுளாகிய ஸ்ரீமந்நாராயண மூர்த்தியின் திருநாமமல்லது மற்றொன்று நானறியேன். அந்தத் திருமால் எப்பொழுதும் எனது உள்ளத்துள்ளே உறைகின்றார். அவரது திருநாமத்திற் காட்டிலும் சிறந்த சொல் வேறில்லை. வேதமறிந்த முனிவர்களும் உபநிஷத்துக்களும் ஒரு முகமாகக் கொண்டாடும் தெய்வத்தின் திருநாமத்தை யன்றோ நான் சொல்வது. இதனில் மிக்கதோர் திருநாமமும் உலகில் உளதோ? வேதங்களைக் கொண்டும் மற்றுமுள்ள பல்வகைச் சாதனங்களைக் கொண்டும் சித்திபெறும் மஹாத்மாக்கள் ஜபம்செய்யும் திருமந்திரத்தையன்றோ நான் கூறினேன்; வனங்களிலும் பெரியமலைகளிலும் வசித்துத் தவவேடம் பூண்டு முத்தியடைபவர்கள் பெறும் ஆனந்தத்தை யன்றோ நான் இத்திருநாமத்தினால் பெற்றது; இத்திருநாமத்தின் மகிமை அளவிடக்கூடியதோ? என்று இனைய பலவுங்கூறினன்.

இவ்வளவுங் கேட்ட ஆசிரியன் அச்சிறுவனுக்கு யாதொரு மறு மொழியுங் கூறமாட்டாதவனாய் மனங்கலங்கி 'இனி நான் ஈடேறும் வழி என்னே! எனக்கு அழிவுகாலம் வந்திட்டதுபோலும்' என்று சிந்தித்துக்கொண்டு ஓடிச்சென்று இரணியனிடம் சேர்ந்து கனக்கண்டவன் அதிசயங் கூறுமாறு போலக் கூறத் தொடங்கி "மஹாப்ரபுவே! உனது மகன் நெஞ்சால் நினைத்தற்கும் வாயாற்சொல்லுதற்கும் தகாதவற்றைச் சொல்லிக்கொண்டு கல்வி பயிலாதிருக்கின்றனன்" என்றான். அதுகேட்ட இரணியன் குருவை நோக்கி என் மகன் சொன்னவற்றைச் சொல்லாய் என்றான். அதற்குக் குரு தலைமேல் அஞ்சலி செய்துகொண்டு "நாதனே! காதுக்கு நாராசம் போன்ற அச்சொல்லை நான் உனக்குச் சொன்னால் நரகத்தை யடைவேன், நாவும் வெந்து போம்" என்றான். அதுகேட்ட இரணியன் 'எனது புதல்வனை வெகு சீக்கிரமாக இங்கு அழைத்து வாருங்கள்' என்று ஏவலாளர்க்குக் கட்டளையிட, அவர்கள் ஓடிச்சென்று ப்ரஹ்லாதனிடம் தந்தையின் கட்டளையைத் தெரிவிக்க, உடனே அவன் தாதையிடம் வந்து வணங்கி நின்றான். அன்னவனை இரணியன் மார்பாரப் புல்கி அருகே உட்கார வைத்து 'குழந்தாய்! உனது குரு வெறுக்கும்படி நீ ஏதோ தவறாகச் சொன்னாயாமே, அச்சொல் யாது? சொல்லு என்ன, [பிரகலாதன்] "ப்ரணவஸ்வரூபியாய் உலகுக்கெல்லாம் ஒப்பற்ற தனி நாயகனான கடவுளின் திருநாமமே யான் கூறியது. உபதேசமாகக் கேட்டுணர்தற்கும் சிந்தனை செய்தற்கும் பிறவித் துன்பக்கடலைக் கடத்தற்கும் மிக உரியதான இத் திருநாமத்திற் காட்டிலும் சிறந்தது வேறொன்று மில்லையே; குரு வெறுக்கத் தக்கதொன்றும் யான் சொல்லவில்லையே". [இரணியன்] குழந்தாய்! நீ சொன்ன அச்சொல்லை விளக்கமாகக் கூறுவாயாக என்றான். [பிரகலாதன்] அறம் பொருளின்பங்களுள் விரும்பிய பலன்களை யெல்லாம் கொடுப்பதும் மோக்ஷத்தை யளிப்பதுமான எம்பிரான் திருநாமமே நான் சொன்னது; அதற்குத் தான் திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரமென்று பெயர். இத் திருமந்திரத்திற் காட்டிலும் சிறந்தது வேறில்லை. உனது உயிர்க்கும் எனது உயிர்க்கும் மற்றுமெல்லாவுயிர்கட்கும் இத் திருமந்திரமே எல்லா நன்மைகளையும் விளைக்கவல்லது என்று நன்றாக ஆலோசித்தே இதனை நான் சொன்னேன் என்று வெகு கம்பீரமாகச் சொல்லி முடித்தான்.

இங்ஙனஞ் சொல்லக்கேட்ட இரணியன், "அடா பயலே! நான் பிறந்த நாள் தொடங்கி இன்றளவும், நீ குறித்த பெயரைச் சொன்ன வாயையும் சிந்தித்த நெஞ்சையும் என்னுடைய ஆணை சுடுமென்பது மூவுலகிலும் ப்ரஸித்தம்; அப்படியிருக்க இந்தப் பெயரை உனக்குச் சொன்னவர் ஆர்? நீ இதனை யாருடனே கற்றுக் கொண்டாய்? மும்மூர்த்திகளும் மற்றைத் தேவர்களும் முனிவர்களும் எப்பொழுதும்

சிந்திப்பது என் கழலிணையே, துதிப்பது என் பெயரே; ஆதலின் அவர்களெல்லோரும் உனக்கு இந்தப் புதிய பெயரைக் கூறுவதற்கு அஞ்சுவர்களே; பிள்ளாய்! இதனை நீ வேறு யாரிடத்து உணர்ந்தாய்? என்னோடு போர் செய்யும் பொருட்டுப் பலதரம் எதிர்த்துவந்து என் முன் நிற்க மாட்டாமல் கருடனது வேகத்தால் தப்பியோடிச் சென்று மறைந்து பாற்கடலிலே புகுந்தொளித்துக்கொண்டு இன்னமும் வெளி வராமல் உறங்குபவனாகிய விஷ்ணுவின் பெயரை உனக்கு எல்லா நன்மைகளையும் விளைவிப்பதாகக் கூறினவர் யாரோ? நம் குலத்தில் தோன்றிய எண்ணிறந்த பல பெரியோர்கள் அந்த விஷ்ணுவினால் அழிந்தவர்களாயிருக்க இதனை நீ அறிந்து வைத்தும் அவன் பெயரைச் சொல்லத்துணிந்த துர்ப்புத்தி என்னோ? தன் இனத்திற்குப் பகையாகிய கருடனது பெயரைப் பாம்பு பக்தியோடு கூறுவதுமுண்டோ? வலிமையிற் சிறந்த எனது உடன்பிறந்தவனான ஹிரண்யாக்ஷனை ஒரு பன்றியின் வடிவமாய்த் தோன்றிக் கொன்றவனது பெயரைப் பகர்வதற்காகவோ உன்னை நான் பிள்ளையாகப் பெற்றது. மீண்டும் இத்தன்மையனவான பயனற்ற வார்த்தைகளைச் சொல்லாதே: குருவின் கட்டளையே காக்கத்தக்கதென்று துணிந்து இனி அவரது கட்டளையின்படி கல்விபயில்வாயாக; போ" என்று மிகுந்த கோபக்குறியுடன் சொல்லி முடித்தனன்.

இவ்வளவுஞ் சொல்லக்கேட்ட ப்ரஹ்லாதன் மீண்டும் தந்தையை நோக்கி "அப்பா!, பிரமன் முதலிய உயிர்களெல்லாம் அப்பெருமானது திருநாபிக் கமலத்தின் ஒரு பகுதியிலே தங்கும். சிந்தைக்கும் கோசரமல்லனான அத்திருமால் காண்பவர்களினுடைய கண்களினுள்ளும் மறைந்துள்ளான்; மாஞானியர்களின் மனத்தில் நிறைந்திருப்பான்; பஞ்ச பூதங்களிலும் அந்தர்யாமியாய் மறைந்துள்ளான். ஸகலப் பிராணிகளினுடையவும் மனமொழி மெய்களிற் பொருந்தியுள்ளான்: அவனது நிலைமையை ஆலோசிக்குமிடத்து, ஓர் அக்ஷரமாகிய ஓமென்னும் பிரணவத்தில் மறைந்துள்ளான், ஸகல வேதங்களிலும் விரிந்துள்ளான் என்னத்தகும். காமம் வெகுளி முதலிய தீய குணங்களைத் தன்னடியர்க்குத் தீர்த்தருள்கின்ற அத்திருமாலினது திருநாமங்களின் மகிமையும் அவனது படைப்பமைப்புக் கெடுப்புத் தொழில்களின் திறமும் எவராலேனும் சொல்லித் தலைக் கட்டற்பாலனவோ? இங்ஙனம் ஒப்பற்ற பெருமைவாய்ந்த ஸ்ரீமந்நாராயணனை இகழ்வதனால் அந்தோ! நீ பெற்றிருக்கின்ற செல்வங்களையும் ஆயுளையுமிழக்கின்றனையே யென்று நானிரங்கி அப்பெருமானது திருநாமத்தைத் துதித்து அவனை வாழ்த்தினேன்; என்ன பிழை செய்தேன் சொல்லிக்காண்" என்று கூறி முடித்தான்.

இவை கேட்டலும் இரணியனுக்குண்டான கோபம் வருணிக்க இயலாததாயிருந்தது. எல்லாவுலகங்களும் அஞ்சும்படி யெழுந்த அக்கோவத்தின் உக்கிரத்தால் ஸூர்யன் முதலிய சோதிகளும் மேலுலகமும் சுழலலாயின; பூமியினிடங்கள் அசையலாயின; ரத்தத்தைச் சொரிந்த அவனது கண்களினின்று புகைகள் மேலெழுந்தன; இங்ஙனம் கோபத்தின் எல்லையிலே நின்ற அவன் தனது பரிஜனங்களை நோக்கி 'இப்பாவிப்பயலுக்கு இதனைக் காட்டிலும் என்னோடு விளைக்கும் பகைமை வேறொன்றுமுள்ளதோ? வஞ்சனையாக என் குடலிலே ஊறியிருந்து இப்படிப்பட்ட பகைவடிவமொன்று உண்டாயிற்று: இவனது எண்ணத்தை இன்னமும் அறியவேண்டுவதில்லை; எனது தொன்று தொட்ட பகைவனான திருமாலுக்கு அன்புமிக்க தொண்டன் யானென்று கூசாது கூறுகின்ற இவனைக் கொன்றிடுங்கள் எனக் கட்டளையிட்டனன். உடனே யமகிங்கரர்கள் போன்ற அசுரர் பலர் பிரகலாதனைப் பிடித்துக் கொண்டார்கள்- கோபாக்கினி சொலிக்கின்ற அஞ்சாத நோக்கை யுடையவர்களான அவ்வசுரர்கள் ஒரு யானைக் குட்டியைப் பல சிங்கக் கூட்டங்கள் வந்து சூழ்ந்துகொண்டாற்போல அப்பிரகலாதனைச் சூழ்ந்து கொண்டு அரண்மனை வாயிலின் பெரு வெளியிலே அவனைக்கொண்டு போய்ச்

சேர்த்து ஆயிரக்கணக்கான மழுக்களையும் கூரிய வாட்படைகளையும் உயரவெடுத்து அவன்மீது வீசினார்கள்; உயிருடனே இவனுடலைத் தின்று விடுவோமென்று சொல்லிக்கொண்டு இடிபோல் பயங்கரமாக அதட்டினார்கள். அவர்கள் வீசியெறிந்த மழுக்களும் வாட்களும் பரமபக்தனான அவனை யாதொன்றும் செய்யமாட்டாவாயின; தாக்கவும் குத்தவும் பிளக்கவும் அவர்களெறிந்த ஆயுதங்களெல்லாம் அவனுடலிற் பட்டவளவில் முறிந்து நுண்ணிய துகள்களாயொழிந்து அவனுடம்பு முழுவதிலும் தினவு சொறிதல் போன்ற தன்மையையும் செய்யாவாயின; அங்ஙனமாக அவன் எம்பெருமானது இணைத்தாமரையடிகளையே மேன்மேலுஞ் சிந்தை செய்து கொண் டும் அவனது திருநாமத்தையும் உயர உச்சரித்துக் கொண்டும் விளங்கினன். பின்பு அவ்வசுரர்கள் இரணியனிடஞ்சென்று "வலியோனே! எங்களிடமிருந்த சிறந்த பெரிய ஆயுதங்களெல்லாம் பொடியாகி விட்டன; அவற்றால் உன் பிள்ளையினுடம்புக்குச் சிறிது தீங்கு முண்டாகவில்லை! இனி நாங்கள் செய்யவேண்டிய செயல் யாதோ? கட்டளையிடவேணும்" என்று கூற, அது கேட்ட இரணியன் "அப் பயல் மாய மனத்தனானதால் அம்மாயையின் வலிமைகொண்டு ஆயுதங்களைக் கட்டிவிட்டான் போலும்; இருக்கட்டும். விரைவாக நெருப்பை மூட்டி நிறைத்து அதில் அவனைத் தள்ளுங்கள்" என்றுரைத்தான்; அங்ஙனமே அவ்வசுரர்கள் நெருப்பை மூட்டுந் தொழிலிலே முயன்று நின்றார்கள். ஒரு பெருங்குழியிலே விறகுகளை மலைபோல உயரமாக அடுக்கி, குடங்குடமாக எண்ணெயையும் வெண்ணெயையும் நெய்யையும் சொரிய, நெருப்பு வானத்தளவு மெழுந்து சொலிக்க அதில் பிரகலாதனை யெடுத்துப் போட்டார்கள். அப்போது அவன் ஹரிநாமஸங்கீர்த்தனமே செய்துகொண்டி ருந்ததனால் அந்த நெருப்புக் குளிர நின்றது.

உடனே அசுரர்கள் இரணியனிடம் ஓடிச்சென்று "மகாப்பிரபுவே! உன் மைந்தனை, சுழன்றெரிகின்ற நெருப்புமிக்க பெருங்குழியிற் பொகட்டபொழுதும் அந்த நெருப்பு அவனை எரிக்கவில்லை; இனி மற்றும் நாங்கள் செய்யத்தக்கது யாது?" என்ன, இரணியன் கோபாக்னி பொங்கியெழுகின்ற கண்ணினனாய் "என் கட்டளைக்கு இணங்கி நடவாத அக்னிதேவனையும் கட்டிக் கொடிய சிறையில் வைத் திடுங்கள்; எனது கள்வக்குமரனைப் பிடுங்கித்தின்னுமாறு அஷ்டமகாநாகங்களையும் அவன்மேல் ஏவுங்கள்" என்றனன். அவ்விரணியன் நினைத்த மாத்திரத்தில் அனந்தன் முதலான அஷ்டமகாநாகங்கள் அங்கு வந்துசேர்ந்து ப்ரஹ்லாதன் மேற்பாய்ந்து தம் விஷப்பற்கள் அழுந்த ஊன்றிக் கடிக்கவும் ஸ்ரீ சேஷசயனனான ஸ்ரீமந் நாராயணனிடத்துப் பரமபக்தியே வடிவெடுத்த அச் சிறுவன் சிறிதும் வருந்திற்றிலன். பாம்புகளுக்கு வைரியாகிய கருடனும் நடுக்கமடையும்படி அந்த அஷ்டமகாநாகங்கள் பிரகலாதனைக் கடித்துப் பிடுங்கியபொழுது அவற்றின் பற் கள் வலிமையொழிந்து ஒடிந்து உதிர்ந்தன; கடிப்பதற்காக அவை பற்களை ஊன்ற வைத்த பொழுது அவற்றின் துளைகளிலிருந்தெல்லாம் விஷம் பாயாமல் அமுதத் துளிகளே ஊறி யொழுகின.

இன்னும் என்ன செய்தும் பிரகலாதன் இறவாததைக் கண்டு இரணியன் இந்தப் பயல் அசுரர்கட்கு உரியதொரு மாயையினால் இறவாதிருக்கைக்கு உரிய உபா யத்தை இயல்விலே உடையான் போலும்; இருக்கட்டும்; இனி இவனுயிரை யானே கவர்வேன்' என்று சொல்லிச் சீறிச் சிவந்து உறுமிக்கொண்டு சிறுவனரு கில் வந்தனன். வந்த தந்தையை மைந்தன் வணங்கி 'எந்தாய்! எனது நீ பெற்ற வுயிரை நீ கவர்ந்துகொள்ள நினைத்தாயெனினும் இவ்வுயிர் உனது வசத்திலுள்ள தன்றே: ஸகல லோகங்களையும் ஒருங்கு படைத்தருளியவரான ஸ்ரீமந் நாராயண மூர்த்தியே கொள்ளும்படி யுள்ளதன்றோ இவ்வுயிர்; ஏதுக்கு வீண்பிரயாஸம்?

